போற்றி உலகொரு மூன்றையும் புணர்ப்பாய்!
மாற்றுவாய்,துடைப்பாய்,வளர்ப்பாய,காப்பாய்!
கனியிலே சுவையும் காற்றிலே இயக்கமும்
கலந்தாற் போலநீ அனைத்திலும் கலந்தாய்
உலகெலாந் தானாய் ஒளிர்வாய், போற்றி
அன்னை, போற்றி!அமுதமே போற்றி!
புதியதிற் புதுமையாய் முதியதில் முதுமையாய்,
உயிரிலே உயிராய் இறப்பிலும் உயிராய்,
உண்டெனும் பொருளில் உண்மையாய் என்னுளே
நானெனும் பொருளாய்,நானையே பெருக்கித்
தானென மாற்றுஞ் சாகாச் சுடராய்,
கவலைநோய் தீர்க்கும் மருந்தின் கடலாய்
பிணியிருள் கெடுக்கும் பேரொளி ஞாயிறாய்,
யானென தின்றி யிருக்குநல் யோகியர்
ஞானமா மகுட நடுத்திகழ் மணியாய்
செய்கையாய்,ஊக்கமாய,சித்தமாய்,அறிவாய்
நின்றிடுந் தாயே,நித்தமும் போற்றி!
இன்பங் கேட்டேன்,ஈவாய் போற்றி!
துன்பம் வேண்டேன், துடைப்பாய் போற்றி!
அமுதங் கேட்டேன்,அளிப்பாய் போற்றி!
சக்தி,போற்றி!தாயே,போற்றி!
முக்தி போற்றி! மோனமே போற்றி!
சாவினை வேண்டேன்,தவிர்ப்பாய் போற்றி!

## தெய்வப் பாடல்கள்

### 10. சிவசக்தி

இயற்கையென் றுனைரைப்பார்-சிலர்
இணங்கும்ஐம் தங்கள் என்றிசைப்பார்:
செயற்கையின் சக்தியென்பார்-உயித்
தீயென்பார் அறிவென்பார் ஈசனென்பார்;

வியப்புறு தாய்நினக்கே-இங்கு
வேள்விசெய் திடுமெங்கள்‘ஓம்’என்னும்
நயப்படு மதுவுண்டே?-சிவ
நாட்டியங் காட்டிநல் லருள்புரிவாய்
1
அன்புறு சோதியென்பார்-சிலர்
ஆரிருட் பாளின் றுனைப்புகழ்வார்:
இன்பமென் றுரைத்திடுவார்-சிலர்
எண்ணருந் துன்பமென் றுனைஇசைப்பார்;
புன்பலி கொண்டுவந்தோம்-அருள்
பூண்டெமைத் தேவர்தங் குலத்திடுவாய்
மின்படு சிவசக்தி எங்கள்
வீரைநின் திருவடி சரண்புகுந்தோம்.
2
உண்மையில அமுதாவாய்;-புண்கள்
ஒழித்திடு வாய்களி, உதவிடுவாய்!
வண்மைகொள் உயிர்ச்சுடராய்-இங்கு
வளர்ந்திடு வாய்என்றும் மாய்வதிலாய்;
ஒண்மையும் ஊக்கமுந்தான்-என்றும்
ஊறிடுந் திருவருட் சுனையாவாய்;
அண்மையில் என்றும் நின்றே-எம்மை
ஆதரித் தருள்செய்யும் விரதமுற்றாய்
3
தெளிவுறும் அறிவினைநாம்-கொண்டுங
சேர்த்தனம்,நினக்கது சோமரசம்;
ஒளியுறும் உயிர்ச்செடியில்-இதை
ஓங்கிடு மதிவலி தனிற்பிழிந்தோம்;
களியுறக் குடித்திடுவாய்-நின்றன்
களிநடங் காண்பதற் குளங்கனிந்தோம்;
குளிர்சுவைப் பாட்டிசைத்தே-சுரர்
குலத்தினிற் சேர்ந்திடல் விரும்புகின்றோம்
4
அச்சமும் துயரும் என்றே-இரண்டு
அசுரர்வந் தெமையிங்கு சூழ்ந்துநின்றார்.
துச்சமிங் கிவர்படைகள்-பல

தொல்லைகள் கவலைகள் சாவுகளாம்;
இச்சையுற் றிவரடைந்தார்-எங்கள்
இன்னமு தைக்கவர்ந் தேகிடவே,
பிச்சையிங் கெமக்களித்தாய்-ஒரு
பெருநகர் உடலெனும் பெயரின தாம்
5
கோடி மண் டபந்திகழும்-திறற்
கோட்டையிங் கிதையவர் பொழுதனைத்தும்
நாடிநின் றிடர்புரிவார்-உயிர்
நதியினைத் தடுத்தெமை நலித்திடுவார்.
சாடுபல் குண்டுகளால்-ஒளி
சார்மதிக் கூடங்கள் தகர்த்திடுவார்;
பாடிநின் றுனைப்புகழ்வோம்-எங்கள்
பகைவரை அரித்தெமைக் காத்திடுவாய்!
6
நின்னருள் வேண்டுகின்றோம்-எங்கள்
நீதியுந் தர்மமும் நிலைப்பதற்கே
பொன்னவிர் கோயில்களும்-எங்கள்
பொற்புடை மாதரும் மதலையரும்
அன்னநல் லணிவயல்கள்-எங்கள்
ஆடுகள் மாடுகள் குதிரைகளும்,
இன்னவை காத்திடவே அன்னை
இணைமலர்த் திருவடி துணைபுகந்தோம்.
7
எம்முயி ராசைகளும்-எங்கள்
இசைகளும் செயல்களும் துணிவுகளும்,
செம்மையுற் றிடஅருள்வாய் நின்தன்
சேவடி அடைக்கலம் புகுந்துவிட்டோம்
மும்மையின் உடைமைகளும்-திரு
முன்னரிட் டஞ்சலி செய்துநிற்போம்;
அம்மைநற் சிவசக்தி-எமை
அமரர்தம் நிலையினில் ஆக்கிடுவாய்
8

## தெய்வப் பாடல்கள்

### 11. காணி நிலம் வேண்டும்

காணி நிலம் வேண்டும்-பராசக்தி
காணி நிலம் வேண்டும்;-அங்கு,
தூணில் அழகியதாய்-நன்மாடங்கள்
துய்ய நிறத்தினதாய்-அந்தக்
காணி நிலத்திடையே-ஓர் மாளிகை
கட்டித் தரவேணும்;-அங்கு,
கேணி யருகினிலே-தென்னைமரம்
கீற்று மிளநீரும்
1
பத்துப் பன்னிரண்டு-தென்னைமரம்
பக்கத்திலே வேணும்;-நல்ல
முத்துச் சுடர்போலே-நிலாவொளி
முன்புவர வேணும்?அங்கு
கத்துங் குயிலோசை-சற்றே வந்து
காதிற்பட வேணும்;-என்றன்
சித்தம் மகிழ்ந்திடவே-நன்றாயிளந்
தென்றல்வர வேணும்.
2
பாட்டுக் கலந்திடவே-அங்கேயொரு
பத்தினிப் பெண்வேணும்;-எங்கள்
கூட்டுக் களியினிலே-கவிதைகள்
கொண்டுதர வேணும்;-அந்தக்
காட்டு வெளியினிலே,-அம்மா!நின்தன்
காவலுற வேணும்;என்தன்
பாட்டுத் திறத்தாலே-இவ்வையத்தைப்
பாலித்திட வேணும்.
3

## தெய்வப் பாடல்கள்

### 12. நல்லதோர் வீணை

நல்லதோர் வீணைசெய்தே-அதை
நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ?
சொல்லடி, சிவசக்தி;-எனைச்

சுடர்மிகும் அறிவுடன் படைத்துவிட்டாய்,
வல்லமை தாராயோ,-இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே?
சொல்லடி,சிவசக்தி!-நிலச்
சுமையென வாழ்ந்திடப் புரிகுவையோ?
1
விசையுறு பந்தினைப்போல்-உள்ளம்
வேண்டிய படிசெலும் உடல்கேட்டேன்,
நசையுறு மனங்கேட்டேன்-நித்தம்
நவமெனச் சுடர்தரும் உயிர்கேட்டேன்,
தசையினைத் தீசுடினும்-சிவ
சக்தியைப் பாடும்நல் அகங்கேட்டேன்,
அசைவறு மதிகேட்டேன்;-இவை
அருள்வதில் உனக்கெதுந் தடையுளதோ?
2

## தெய்வப் பாடல்கள்

### 13. மஹாசக்திக்கு விண்ணப்பம்

மோகத்தைக் கொன்றுவிடு-அல்லா லென்தன்
மூச்சை நிறுத்திவிடு;
தேகத்தைச் சாய்த்துவிடு-அல்லா லதில்
சிந்தனை மாய்த்துவிடு;
யோகத் திருத்திவிடு-அல்லா லென்தன்
ஊனைச் சிதைத்துவிடு;
ஏகத் திருந்துலகம்-இங்குள்ளன
யாவையும் செய்பவளே!
1
பந்தத்தை நீக்கிவிடு-அல்லா லுயிர்ப்
பாரத்தைப் போக்கிவிடு;
சிந்தை தெளிவாக்கு-அல்லா லிரைச்
செத்த வுடலாக்கு;
இந்தப் பதர்களையே-நெல்லாமென
எண்ணி இருப்பேனோ?
எந்தப் பொருளிலுமே-உள்ளே நின்று

இயங்கி யிருப்பவளே.
2
உள்ளம் குளிராதோ?-பொய்யாணவ
ஊனம் ஒழியாதோ?
கள்ளம் உருகாதோ?-அம்மா!பக்திக்
கண்ணீர் பெருகாதோ?
வெள் ளைக் கருணையிலே இந்நாய் சிறு
வேட்கை தவிராதோ?
விள்ளற் கரியவளே அனைத்திலும்
மேவி யிருப்பவளே!
3

## தெய்வப் பாடல்கள்

### 14. அன்னையை வேண்டுதல்

எண்ணிய முடிதல் வேண்டும்,
நல்லவே எண்ணல் வேண்டும்;
திண்ணிய நெஞ்சம் வேண்டும்,
தெறிந்தநல் லறிவு வேண்டும்;
பண்ணிய பாவ மெல்லாம்
பரிதி முன் பனியே போல,
நண்ணிய நின்முன் இங்கு
நசித்திடல் வேண்டும் அன்னாய்!
1

### 15. பூலோக குமாரி

பல்லவி

பூலோக குமாரி
ஹே அம்ருத நாரி

அனுபல்லவி

ஆலோக ஸ்ருங்காரி, அம்ருத கலச குச பாரே,
கால பய குடாரி காம வாரி, கனக லதா ரூப கர்வ திமிராரே.

சரணம்

பாலே ரஸ ஜாலே,பகவதி ப்ரஸீத காலே,
நீல ரத்ன மய நேத்ர விசாலே, நித்ய யுவதி பதநீரஜ மாலே-
லீலா ஜ்வாலா நிர்மித வாணீ,நிரந்தரே நிகில லோகேசாநி
நிருபம ஸீந்தரி நித்ய கல்யாணி, நிஜம் மாம் குரு ஹே மன்மத ராணி.

## தெய்வப் பாடல்கள்

### 16. மஹாசக்தி வெண்பா

தன்னை மறந்து சகல உலகினையும்
மன்ன நிதங்காக்கும் மஹாசக்தி-அன்னை
அவளே துணையென் றனவரதம் நெஞ்சம்
துவளா திருத்தல் சுகம்
நெஞ்சிற் கவலை நிதமும் பயிராக்கி,
அஞ்சி உயிர்வாழ்தல் அறியாமை;-தஞ்சமென்றே
வையமெலாங் காக்கும் மஹாசக்தி நல்லருளை
ஐயமறப் பற்றல் அறிவு

வையகத்துக் கில்லை,மனமே!நினக்குநலஞ்
செய்யக் கருதியிவை செப்புவேன்-பொய்யில்லை
எல்லாம் புரக்கும் இறைநமையுங் காக்குமென்ற
சொல்லால் அழியும் துயர்.

எண்ணிற் கடங்காமல் எங்கும் பரந்தனவாய்
விண்ணிற் சுடர்கின்ற மீனையெல்லாம் பண்ணிய
சக்தியே நம்மைச் சமைத்ததுகாண். நூறாண்டு
பக்தியுடன் வாழும் படிக்கு

## தெய்வப் பாடல்கள்

### 17. ஓம் சக்தி

நெஞ்சுக்கு நீதியும் தோளுக்கு வாளும்
நிறைந்த சுடர்மணிப் பூண்,
பஞ்சுக்கு நேர்பல துன்பங்களாம்,இவள்
பார்வைக்கு நேர்பெருந்தீ
வஞ்சனை யின்றிப் பகையின்றிச் சூதின்றி
வையக மாந்தரெல் லாம்,
தஞ்சமென் றேயுரைப் பீர்அவள் பேர்,சக்தி

ஓம்சக்தி, ஓம்சக்தி, ஓம்.

"நல்லதுந் தீயதுஞ் செய்திடும் சக்தி
நலத்தை நமக்கிழைப் பாள்;
அல்லது நீங்கும்"என் றேயுலகேழும்
அறைந்திடு வாய் முர சே!
சொல்லத் தகுந்த பொருளன்று காண்!இங்கு
சொல்லு மவர்தமை யே,
அல்லல் கெடுத்தம ரர்க்கிணை யாக்கிடும்
ஓம்சக்தி, ஓம்சக்தி, ஓம்.

நம்புவ தேவழி யென்ற மறையதன்னை
நாமின்று நம்பிவிட் டோம்
கும்பிட்டெந்நேரமும்"சக்தி"யென் றாலுனைக்
கும்பிடு வேன்,மன மே!
அம்புக்கு தீக்கும் விடத்துக்கும் நோவுக்கும்
அச்ச மில்லாத படி
உம்பர்க்கும் இம்பர்க்கும் வாழ்வு தரும்பதம்
ஓம்சக்தி, ஓம்சக்தி, ஓம்.

பொன்னைப் பொழிந்திடு மின்னை வளர்த்திடு,
போற்றி உனக்கிசைத் தோம்;
அன்னை பராசக்தி என்றுரைத் தோம்;தளை
அத்தனை யுங்களைந் தோம்;
சொன்ன படிக்கு நடந்திடு வாய், மன
மே தொழில் வேறில்லை,காண்;
இன்னும தேயுரைப் போம்,சக்தி ஓம் சக்தி,
ஓம்சக்தி, ஓம்சக்தி, ஓம்.

வெள்ளை மலர்மிசை வேதக் கருப்பொரு
ளாக விளங்கிடு வாய்!
தெள்ளு கலைத்தமிழ் வாணி! நினக்கொரு
விண்ணப்பஞ் செய்திடு வேன்;
எள்ளத் தனைப் பொழு தும்பய னின்றி
இராதென்றன் நாவினி லே
வெள்ள மெனப்பொழி வாய்சக்தி வேல், சக்தி
வேல், சக்தி வேல்,சக்தி வேல்!

## தெய்வப் பாடல்கள்

### 18. பராசக்தி

கதைகள் சொல்லிக் கவிதை யெழுதென்பார்;
காவி யம்பல நீண்டன கட்டென்பார்;
விதவி தப்படு மக்களின் சித்திரம்
மேவி நாடகச் செய்யுளை மேவென்பார்;
இதய மோஎனிற் காலையும் மாலையும்
எந்த நேரமும் வாணியைக் கூவுங்கால்,
எதையும் வேடில தன்னை பராசக்தி
இன்ப மொன்றினைப் பாடுதல் அன்றியே.

நாட்டு மக்கள் பிணியும் வறுமையும்
நையப்பா டென்றொரு தெய்வங் கூறுமே;
கூட்டி மானுடச் சாதியை ஒன்றெனக்
கொண்டு வையம் முழுதும் பயனுறப்
பாட்டி லேயறங் காட்டெனு மோர் தெய்வம்;
பண்ணில் இன்பமுங் கற்பனை விந்தையும்
ஊட்டி எங்கும் உவகை பெருகிட
ஓங்கும் இன்கவி ஓதெனும் வேறொன்றே.

நாட்டு மக்கள் நலமுற்று வாழவும்
நானி லத்தவர் மேனிலை யெய்தவும்
பாட்டி லேதனி யின்பத்தை நாட்டவும்,
பண்ணி லேகளி கூட்டவும் வேண்டி நான்
மூட்டு மன்புக் கனலொடு வாணியை
முன்னுகின்ற பொழுதி லெலாங்குரல்
காட்டி அன்னை பராசகித ஏழையேன்
கவிதை யாவுந் தனக்கெனக் கேட்கின்றாள்.

மழைபொ ழிந்திடும் வண்ணத்தைக் கண்டுநான்
வானி ருண்டு கரும்புயல் கூடியே
இழையு மின்னல் சரேலென்று பாயவும்,
ஈரவாடை இரைந்தொலி செய்யவும்
உழையெ லாம்இடை யின்றிவ் வானநீர்
ஊற்றுஞ் செய்தி உரைத்திட வேண்டுங்கால்
"மழையுங் காற்றும் பராசக்தி செய்கைகாண்

வாழ்க தாய்!" என்று பாடுமென் வாணியே.

சொல்லி னுக்கெளி தாகவும் நின்றிடாள்
சொல்லை வேறிடஞ் செல்ல வழிவிடாள்;
அல்லி னுக்குட் பெருஞ்சுடர் காண்பவர்
அன்னை சக்தியின் மேனி நலங்கண்டார்.
கல்லி னுக்குள் அறிவொளி காணுங்கால்,
கால வெள்ளத் திலேநிலை காணுங்கால்,
புல்லி னில்வயி ரப்படை காணுங்கால்
பூத லத்தில் பராசக்தி தோன்றுமே!

## தெய்வப் பாடல்கள்

### 19.சக்திக் கூத்து

**ராகம்-பியாக்**

**பல்லவி**

**தகத்தகத்தகத் தகதகவென் றாடோமோ?-சிவ**
**சக்திசக்தி சக்தியென்று பாடோமோ? (தகத்)**

**சரணங்கள்**

**அகத்தகத் தகத்தினிலே உள்நின்றாள்-அவள்**
**அம்மையம்மை எம்மைநாடு பொய்வென்றாள்**
**தகத்தக நமக் கருள் புரிவாள் தாளொன்றே**
**சரண மென்று வாழ்த்திடுவோம் நாமென்றே. (தகத்)**

**புகப்புகப் புக வின்பமடா போதெல்லாம்**
**புறத்தினிலே தள்ளிடுவாய் சூதெல்லாம்**
**குகைக்கு ளங்கே யிருக்குதடா தீபோலே-அது**
**குழந்தைகயதன் தாயடிக்குகீழ் சேய்போலே (தகத்)**

**மிகத்தகைப்படு களியினிலே மெய்சோர-உள**
**வீரம்வந்து சோர்வை வென்று மைதேர**
**சகத்தினி லுள்ள மனிதரெல்லாம் நன்றுநன்றென-நாம்**
**சதிருடனே தாளம் இசை இரண்டுமொன்றென (தகத்)**

**இந்திரனா ருலகினிலே நல்லின்பம்**

**இருக்கு தென்பார் அதனை யிங்கே கொண்டெய்தி,**
**மந்திரம் போல் வேண்டுமடா சொல்லின்பம்-நல்ல**
**மதமுறவே அமுதநிலை கண்டெய்தித் (தகத்)**

## தெய்வப் பாடல்கள்

### 20. சக்தி

துன்ப மிலாத நிலையே சக்தி,
தூக்க மிலாக்கண் விழிப்பே சக்தி;
அன்பு கனிந்த கனிவே சக்தி,
ஆண்மை நிறைந்த நிறைவே சக்தி;
இன்ப முதிர்ந்த முதிர்வே சக்தி,
எண்ணத் திருக்கும் எரியயே சக்தி,
முன்புநிற் கின்ற தொழிலே சக்தி,
முக்தி நிலையின் முடிவே சக்தி.

சோம்பர் கெடுக்கும் துணிவே சக்தி,
சொல்லில் விளங்கும் சுடரே சக்தி;
தீம்பழந் தன்னில் சுவையே சக்தி,
தெய்வத்தை எண்ணும் நினைவே சக்தி;
பாம்பை அடிக்கும் படையே சக்தி;
பாட்டினில் வந்த களியே சக்தி;
சாம்பரைப் பூசி மலைமிசை வாழும்
சங்கரன் அன்புத் தழலே சக்தி.

வாழ்வு பெருக்கும் மமதியே சக்தி,
மாநிலம் காக்கும் மதியே சக்தி;
தாழ்வு தடுக்குஞ் சதிரே சக்தி,
சஞ்சலம் நீக்குந் தவமே சக்தி,
வீழ்வு தடுக்கும் விறலே சக்தி,
விண்ணை யளக்கும் விரிவே சக்தி;
ஊழ்வினை நீக்கும் உயர்வே சக்தி,
உள்ளத் தொளிரும் விளக்கே சக்தி.

## தெய்வப் பாடல்கள்

### 21. வையம் முழுதும்

## கண்ணிகள்

வையம் முழுதும் படைத்தளிக் கின்ற
மஹாசக்தி தன்புகழ் வாழ்த்து கின்றோம்;
செய்யும் வினைகள் அனைத்திலும் வெற்றி
சேர்ந்திட நல்லருள் செய்க வென்றே!

பூதங்கள் ஐந்தில் இருந்தெங்குங் கண்ணிற்
புலப்படும் சக்தியைப் போற்று கின்றோம்;
வேதங்கள் சொன்ன படிக்கு மனிதரை
மேன்மையுறச் செய்தல் வேண்டு மென்றே!

வேகம் கவர்ச்சி முதலிய பல்வினை
மேவிடும் சக்தியை மேவு கின்றோம்;
ஏக நிலையில் இருக்கும் அமிர்தத்தை
யாங்கள் அறிந்திட வேண்டு மென்றே!

உயிரெனத் தோன்றி உணவுகொண் டேவளர்ந்
தோங்கிடும் சக்தியை ஓதுகின்றோம்;
பயிரினைக் காக்கும் மழையென எங்களைப்
பாலித்து நித்தம் வளர்க்க வென்றே.

சித்தத்தி லேநின்று சேர்வ துணரும்
சிவசக்தி தன்புகழ் செப்பு கின்றோம்;
இத்தரை மீதினில் இன்பங்கள் யாவும்
எமக்குத் தெரிந்திடல் வேண்டு மென்றே.

மாறுத லின்றிப் பராசக்தி தன்புகழ்
வையமிசை நித்தம் பாடு கின்றோம்;
நூறு வயது புகழுடன் வாழ்ந்துயர்
நோக்கங்கள் பெற்றிட வேண்டு மென்றே.

ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி
ஓம் சக்தி என்றுரை செய்தி டுவோம்;
ஓம் சக்தி என்பவர் உண்மை கண்டார்;சுடர்
ஒண்மைகொண்டார்,உயிர் வண்மை கொண்டார்.

## தெய்வப் பாடல்கள்

### 22. சக்தி விளக்கம்

ஆதிப் பரம்பொருளின் ஊக்கம்-அதை
அன்னை எனப்பணிதல் ஆக்கம்;
சூதில்லை காணுமிந்த நாட்டீர்!மற்றத்
தொல்லை மதங்கள் செய்யும் தூக்கம்.

மூலப் பழம்பொருளின் நாட்டம்-இந்த
மூன்று புவியுமதன் ஆட்டம்;
காலப் பெருங்கள்ததின் மீதே-எங்கள்
காளி நடமுலகக் கூட்டம்

காலை இளவெயிலின் காட்சி-அவள்
கண்ணொளி காட்டுகின்ற மாட்சி;
நீல விசும்பினிடை இரவில்-சுடர்
நேமி யனைத்துமவள் ஆட்சி.

நாரண னென்று பழவேதம்-சொல்லும்
நாயகன் சக்திதிருப் பாதம்;
சேரத் தவம் புரிந்து பெறுவார்-இங்கு
செல்வம் அறிவு சிவபோதம்.

ஆதி சிவனுடைய சக்தி-எங்கள்
அன்னை யருள்பெறுதல் முக்தி;
மீதி உயிரிருக்கும் போதே-அதை
வெல்லல் சுகத்தினுக்கு யுக்தி.

பண்டை விதியுடைய தேவி-வெள்ளைப்
பாரதி யன்னையருள் மேவி,
கண்ட பொருள்விளக்கும் நூல்கள்-பல
கற்றலில் லாதவனோர் பாவி.

மூர்த்திகள் மூன்று பொருள் ஒன்று;-அந்த

மூலப் பொருள் ஒளியின் குன்று;
நேர்த்தி திகழும் அந்த ஒளியை-அந்த
நேரமும் போற்று சக்தி என்று.

## தெய்வப் பாடல்கள்

### 23.சக்திக்கு ஆத்ம சமர்ப்பணம்

ராகம்-பூபாளம் தாளம்-சதுஸ்ர ஏகம்

கையைச், சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சாதனைகள் யாவினையுங் கூடும்-கையைச்
]சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சக்தியுற்றுக் கல்வினையுஞ் சாடும்.

கண்ணைச்,சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சக்தி வழியினையது காணும்-கண்ணைச்
சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சத்தியமும் நல்லருளும் பூணும்.

செவி, சக்தி தனக்கே கருவி யாக்கு-சிவ
சக்திசொலும் மொழியது கேட்கும்-செவி
சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சக்தி திருப் பாடலினை வேட்கும்.

வாய், சக்தி தனக்கே கருவி யாக்கு-சிவ
சக்தி புகழினையது முழங்கும்-வாய்
சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சக்திநெறி யாவினையும் வழங்கும்.

சிவ, சக்திதனை நாசி நித்தம் முகரும்-அதைச்
சக்தி தனக்கே கருவி யாக்கு-சிவ
சக்திதிருச் சுவையினை நுகரும்-சிவ
சக்தி தனக்கே எமது நாக்கு.

மெய்யைச்,சக்தி தனக்கே கருவி யாக்கு-சிவ
சக்திதருந் திறனதி லேறும்-மெய்யைச்

சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சாதலற்ற வழியினைத் தேறும்

கண்டம், சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சத்தமும் நல்லமுதைப் பாடும்-கண்டம்
சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சக்தியுடன் என் றும்உற வாடும்.

தோள், சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
தாரணியும் மேலுலகுந் தாங்கும்-தோள்
சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சக்தி பெற்று மேருவென ஓங்கும்.

நெஞ்சம், சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சக்தியுற நித்தம் விரிவாகும்-நெஞ்சம்
சக்தி தனக்கே கருவி யாக்கு-அதைத்
தாக்கவரும் வாளொதுங்கிப் போகும்.

சிவ, சக்தி தனக்கே எமது வயிறு-அது
சாம்பரையும் நல்லவுண வாக்கும்-சிவ
சக்தி தனக்கே எமது வயிறு-அது
சக்திபெற உடலினைக் காக்கும்.

இடை, சக்தி தனக்கே கருவி யாக்கு-நல்ல
சக்தியுள்ள சந்ததிகள் தோன்றும்-இடை
சக்தி தனக்கே கருவி யாக்கு-நின்தன்
சாதிமுற்றும் நல்லறத்தில் ஊன்றும்.

கால், சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சாடியெழு கடலையுந் தாவும்-கால்
சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சஞ்சலமில் லாமலெங்கும் மேவும்.

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சஞ்சலங்கள் தீர்ந்தொருமை கூடும்-மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சாத்துவிகத் தன்மையினைச் சூடும்.

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சக்தியற்ற சிந்தனைகள் தீரும்-மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சாரும் நல்ல உறுதியும் சீரும்.

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சக்திசக்தி சக்தியென்று பேசும்-மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு-அதில்
சார்ந்திருக்கும் நல்லுறவும் தேசும்.

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சக்தி நுட்பம் யாவினையும் நாடும்-மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சக்திசக்தி யென்றுகுதித் தாடும்.

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சக்தியினை எத்திசையும் சேர்க்கும்-மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
தான் விரும்வில் மாமலையைக் பேர்க்கும்

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சந்ததமும் சக்திதனைச் சூழும்-மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு-அது
சாவுபெறும் தீவினையும் ஊழும்.

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு-எதைக்
தான் விரும்பு னாலும்வந்து சேரும்-மனம்
சக்தி தனக்கே உரிமை யாக்கு-உடல்
தன்னிலுயர் சக்திவந்து சேரும்.

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு-இந்தத்
தாரணியில் நூ றுவய தாகும்-மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு-உன்னைச்
சாரவந்த நோயழிந்து போகும்.

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு-தோள்
சக்திபெற்று நல்ல தொழில் செய்யும்-மனம்

சக்தி தனக்கே கருவி யாக்கு-எங்கும்
சக்தியருள் மாரிவந்து பெய்யும்.

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு-சிவ
சக்தி நடையாவும் நன்கு பழகும்-மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு-முகம்
சார்ந்திருக்கும் நல்லருளும் அழகும்.

மனம், சக்தி தனக்கே கருவி யாக்கு-உயர்
சாத்திரங்கள் யாவும் நன்கு தெரியும்-மனம்
சக்தி தனக்கே கருவி யாக்கு-நல்ல
சத்திய விளக்குநித்தம் எரியும்

சித்தம், சக்தி தனக்கே உரிமை யாக்கு-நல்ல
தாளவகை சந்தவகை காட்டும்-சித்தம்
சக்தி தனக்கே உரிமை யாக்கு-அதில்
சாரும்நல்ல வார்த்தைகளும் பாட்டும்.

சித்தம், சக்தி தனக்கே உரிமை யாக்கு-அது
சக்தியையெல்லோர்க்குமுணர்வுறுத்தும்-சித்தம்
சக்தி தனக்கே உரிமை யாக்கு-அது
சக்திபுகழ் திக்கனைத்தும் நிறுத்தும்.

சித்தம், சக்தி தனக்கே உரிமை யாக்கு-அது
சக்திசக்தி யென்று குழலூதும்-சித்தம்
சக்தி தனக்கே உரிமை யாக்கு-அதில்
சார்வதில்லை அச்சமுடன் சூதும்.

சித்தம், சக்தி தனக்கே உரிமை யாக்கு-அது
சக்தியென்று வீணைதனில் பேசும்-சித்தம்
சக்தி தனக்கே உரிமை யாக்கு-அதில்
சக்திபரி மளமிங்கு வீசும்.

சித்தம், சக்தி தனக்கே உரிமை யாக்கு-அது
சக்தியென்று தாளமிட்டு முழக்கும்-சித்தம்
சக்தி தனக்கே உரிமை யாக்கு-அது
சஞ்சலங்கள் யாவினையும் அழிக்கும்

சித்தம், சக்தி தனக்கே உரிமை யாக்கு-அது
சக்திவந்து கோட்டைகட்டி வாழும்-சித்தம்
சக்தி தனக்கே உரிமை யாக்கு-அது
சக்தியருட் சித்திரத்தில் ஆழும்

மதி, சக்தி தனக்கே உடைமை யாக்கு-அது
சங்கடங்கள் யானையும் உடைக்கும்-மதி
சக்தி தனக்கே உடைமை யாக்கு-அங்கு
சத்தியமும் நல்லறமும் கிடைக்கும்.

மதி, சக்தி தனக்கே உடைமை யாக்கு-அது
சாரவரும் தீமைகளை விலக்கும்-மதி
சக்தி தனக்கே உடைமை யாக்கு-அது
சஞ்சலப் பிசாசுகளைக் கலக்கும்.

மதி, சக்தி தனக்கே உடைமை யாக்கு-அது
சக்தி செய்யும் விந்தைகளைத் தேடும்-மதி
சக்தி தனக்கே உடைமை யாக்கு-அது
சக்தியுறை விடங்களை நாடும்.

மதி, சக்தி தனக்கே உடைமை யாக்கு-அது
தர்க்கமெனுங் காட்டிலச்சம் நீங்கும்-மதி
சக்தி தனக்கே உடைமை யாக்கு-அதில்
தள்ளி விடும் பொய்ந்நெறியும் நீங்கும்.

மதி, சக்தி தனக்கே உடைமை யாக்கு-அதில்
சஞ்சலத்தின் தீயவிருள் விலகும்-மதி
சக்தி தனக்கே உடைமை யாக்கு-அது
சக்தியொளி நித்தமுநின் றிலகும்.

மதி, சக்தி தனக்கே உடைமை யாக்கு-அதில்
சார்வதில்லை ஐயமெனும் பாம்பு-மதி
சக்தி தனக்கே உடைமை யாக்கு-அங்கு
தான் முளைக்கும் முக்திவிதைக் காம்பு.

மதி, சக்தி தனக்கே அடிமை யாக்கு-அது
தாரணியில் அன்பு நிலை நாட்டும்-மதி

சக்தி தனக்கே அடிமை யாக்கு-அது
சர்வசிவ சக்தியினைக் காட்டும்.

மதி, சக்தி தனக்கே அடிமை யாக்கு-அது
சக்திதிரு வருளினைச் சேர்க்கும்-மதி
சக்தி தனக்கே அடிமை யாக்கு-அது
தாமதப்பொய்த் தீமைகளைப் பேர்க்கும்

மதி, சக்தி தனக்கே அடிமை யாக்கு-அது
சத்தியத்தின் வெல்கொடியை நாட்டும்-மதி
சக்தி தனக்கே அடிமை யாக்கு-அது
தாக்கவரும பொய்ப்புலியை ஓட்டும்.

மதி, சக்தி தனக்கே அடிமை யாக்கு-அது
சத்தியநல் லிரவியைக் காட்டும்-மதி
சக்தி தனக்கே அடிமை யாக்கு-அதில்
சாரவரும் புயல்களை வாட்டும்.

மதி, சக்தி தனக்கே அடிமை யாக்கு-அது
சக்திவிர தத்தையென்றும் பூணும்-மதி
சத்திவர தத்தை யென்றுங் காத்தால்-சிவ
சக்திதரும் இன்பமும்நல் லூணும்.

மதி, சக்தி தனக்கே அடிமை யாக்கு-தெளி
தந்தமுதப் பொய்கையென ஒளிரும்-மதி
சக்தி தனக்கே அடிமை யாக்கு-அது
சந்ததமும் இன்பமுற மிளிரும்.

அகம், சக்தி தனக்கே உடைமை யாக்கு-அது
தன்னையொரு சக்தியென்று தேரும்-அகம்
சக்தி தனக்கே உடைமை யாக்கு-அது
தாமதமும் ஆணவமும் தீரும்.

அகம், சக்தி தனக்கே உடைமை யாக்கு-அது
தன்னையவள் கோயிலென் றுகாணும்-அகம்
சக்தி தனக்கே உடைமை யாக்கு-அது
தன்னை யெண்ணித் துன்பமுற நாணும்.

அகம், சக்தி தனக்கே உடைமை யாக்கு-அது
சக்தியெனும் கடலிலோர் திவலை-அகம்

சக்தி தனக்கே உடைமை யாக்கு-சிவ
சக்தியுண்டு நமக்கில்லை கவலை.

அகம், சக்தி தனக்கே உடைமை யாக்கு-அதில்
சக்திசிவ நாதநித்தம் ஒலிக்கும்-அகம்
சக்தி தனக்கே உடைமை யாக்கு-அது
சக்திதிரு மேனியொளி ஜ்வலிக்கும்.

சிவ, சக்தி என்றும் வாழி! என்று பாடு-சிவ
சக்தி சக்தி என்றுகுதித் தாடு-சிவ
சக்தி என்றும் வாழி! என்று பாடு-சிவ
சக்திசக்தி என்றுவிளை யாடு.

## தெய்வப் பாடல்கள்

### 24. சக்தி திருப்புகழ்

சக்தி சக்தி சக்தீ சக்தீ சக்தீ சக்தீ என்றோது;
சக்தி சக்தி சக்தீ என்பார்-சாகார் என்றே நின்றோது;
சக்தி சக்தி என்றே வாழ்தல்-சால்பாம் நம்மைச் சார்ந்தீரே!
சக்தி சக்தி என்றீ ராகில்-சாகா உண்மை சேர்ந்தீரே!
சக்தி சக்தி என்றால் சக்தி-தானே சேரும் கண்டீரே!
சக்தி சக்தி என்றால் வெற்றி-தானே சேரும் கண்டீரே!
சக்தி சக்தி என்றே செய்தால்-தானே செய்கை நேராகும்;
சக்தி சக்தி என்றால் அஃது-தானே முக்தி வேராகும்.
சக்தி சக்தி சக்தீ சக்தீ சக்தீ என்றே ஆடாமோ?
சக்தி சக்தி சக்தீ யென்றே-தாளங் கொட்டிப் பாடாமோ?
சக்தி சக்தி என்றால் துன்பம்-தானே தீரும் கண்டீரே!
சக்தி சக்தி என்றால் இன்பம்-தானே சேரும் கண்டீரே!
சக்தி சக்தி என்றால் செல்வம்- தானே ஊறும் கண்டீரோ?
சக்தி சக்தி என்றால் கல்வி-தானே தேறும் கண்டீரோ?
சக்தி சக்தி சக்தீ சக்தீ-சக்தீ சக்தீ வாழீ நீ!
சக்தி சக்தி சக்தீ சக்தீ-சக்தீ சக்தீ வாழீ நீ!
சக்தி சக்தி வாழீ என்றால்-சம்பத் தெல்லாம் நேராகும்;
சக்தி சக்தி என்றால் சக்தி-தாசன் என்றே பேராகும்.

## தெய்வப் பாடல்கள்

### 25. சிவசக்தி புகழ்

ராகம்-தன்யாசி　　　　　　　　　　தாளம்-சதுஸ்ர ஏகம்

ஓம், சக்திசக்தி சக்தியென்று சொல்லு-கெட்ட
சஞ்சலங்கள் யாவினையும் கொல்லு;
சக்திசக்தி சக்தியென்று சொல்லி-அவள்
சந்நிதியி லேதொழுது நில்லு.

ஓம்,சக்திமிசை பாடல்பல பாடு-ஓம்
சக்திசக்தி என்று தாளம் போடு;
சக்திதருஞ் செய்கை நிலந் தனிலே-சிவ
சக்திவெறி கொண்டுகளித் தாடு.

ஓம்,சக்திதனை யேசரணங் கொள்ளு என்றும்
சாவினுக்கொ ரச்சமில்லை தள்ளு,
சக்திபுக ழாமமுதை அள்ளு-மது
தன்னிலினிப் பாகுமந்தக் கள்ளுன.

ஓம், சக்திசெய்யும் புதுமைகள் பேசு-நல்ல
சக்தியற்ற பேடிகளை ஏசு;
சக்திதிருக் கோயிலுள்ள மாக்கி-அவள்
தந்திடுநற் குங்குமத்தைப் பூசு.

ஓம், சக்தியினைச் சேர்ந்ததிந்தச் செய்கை -இதைச்
சார்ந்துநிற்ப தேநமக்கோ ருய்கை;
சக்தியெனும் இன்பமுள்ள பொய்கை-அதில்
தண்ணமுத மாரிநித்தம் பெய்கை.

ஓம்,சக்திசக்தி சக்தியென்று நாட்டு-சிவ
சக்தியருள் பூமிதனில் காட்டு;
சக்திபெற்ற நல்லநிலை நிற்பார்-புவிச்
சாதிகளெல் லாமதனைக் கேட்டு.

ஓம்,சக்திசக்தி சக்தியென்று முழங்கு-அவள்
தந்திரமெல் லாமுலகில் வழங்கு;

சக்தியருள் கூடிவிடு மாயின்-உயிர்
சந்ததமும் வாழும்நல்ல கிழங்கு

ஓம்,சக்திசெய்யுந் தொழில்களை எண்ணு நித்தம்
சக்தியுள்ள தொழில்பல பண்ணு;
சக்திதனை யேயிழந்து விட்டால்-இங்கு
சாவினையும் நோவினையும் உண்ணு.

ஓம், சக்தியரு ளாலுலகில் ஏறு-ஒரு
சங்கடம்வந் தாலிரண்டு கூறு;
சக்திசில சோதனைகள் செய்தால்-அவள்
தண்ணருளென் றேமனது தேறு.

ஓம்,சக்திதுணை என்று நம்பி வாழ்த்து-சிவ
சக்திதனையே அகத்தில் ஆழ்த்து;
சக்தியும் சிறப்பும் மிகப் பெறுவாய்-சிவ
சக்தியருள் வாழ்கவென்று வாழ்த்து!

## தெய்வப் பாடல்கள்

### 26.பேதை நெஞ்சே!

இன்னுமொரு முறைசொல்வேன்,பேதை
நெஞ்சே!
எதற்குமினி உளைவதிலே பயனொன் றில்லை;
முன்னர்நம திச்சையினாற் பிறந்தோ மில்லை;
முதலிறுதி இடைநமது வசத்தில் இல்லை;
மன்னுமொரு தெய்வத்தின் சக்தி யாலே
வையகத்திற் பொருளெல்லாம் சலித்தல்
கண்டாய்!
பின்னையொரு கவலையுமிங் கில்லை,நாளும்
பிரியாதே விடுதலையைப் பிடித்துக் கொள்வாய்!

நினையாத விளைவெல்லாம் விளைந்து கூடி,
நினைத்தபயன் காண்பதவன் செய்கையன்றோ?

மனமார உண்மையினைப் புரட்டலாமோ?
மஹாசக்தி செய்தநன்றி மறக்க லாமோ?
எனையாளும் மாதேவி,வீரார் தேவி,
இமையவருந் தொழுந்தேவி, எல்லைத் தேவி,
மனைவாழ்வு பொருளெல்லாம் வகுக்குந் தேவி,
மலரடியே துணையென்று வாழ்த்தாய் நெஞ்சே!

சக்தியென்று புகழ்ந்திடுவோம் முருகன்
என்போம்;
சங்கரனென் றுரைத்திடுவோம்,கண்ணன்
என்போம்;
நித்தியமிங் கவள்சரணே நிலையென் றெண்ணி,
நினக்குள்ள குறைகளெல்லாந் தீர்க்கச் சொல்லி
பக்தியினாற் பெருமையெல்லாம் கொடுக்கச்
சொல்லி,
பசிபிணிக ளில்லாமற் காக்கச் சொல்லி,
உத்தமநன் னெறிகளிலே சேர்க்கச் சொல்லி,.
உலகளந்த நாயகிதாள் உரைப்பாய்,நெஞ்சே!

செல்வங்கள் கேட்டால்நீ கொடுக்க வேண்டும்.
சிறுமைகளென் னிடமிருந்தால் விடுக்க
வேண்டும்;
கல்வியிலே மதியினைநீ தொடுக்க வேண்டும்.
கருணையினால் ஐயங்கள் கெடுக்க வேண்டும்,
தொல்லைதரும் அகப்பேயைத் தொலைக்க
வேண்டும்
துணையென்று நின்னருளைத் தொடரச் செய்தே
ந்லலவழி சேர்ப்பித்துக் காக்க வேண்டும்.
‘நமோநமஓம் சக்தி’ யென நவிலாய் நெஞ்சே!

பாட்டினிலே சொல்லுவதும் அவள்சொல்
லாகும்;
பயனனிறி உரைப்பாளோ? பாராய், நெஞ்சே!
கேட்டதுநீ பெற்றிடுவாய்,ஐயமில்லை;
கேடில்லை,தெய்வமுண்டு,வெற்றி யுண்டு;
மீட்டுமுனக் குரைத்திடுவேன், ஆதிச சக்தி,
வேதத்தின் முடியினிலே விளங்கும் சதி,
நாட்டினிலே சனகனைபோல் நமையும்
செய்தாள்;

‘நமோநம,ஓம் சக்தி‘ யென நவிலாய் நெஞ்சே!

## தெய்வப் பாடல்கள்

### 27. மஹா சக்தி

சந்திர னொளியில் அவளைக் கண்டேன்,
சரண மென்று புகுந்து கொண்டேன்;
இந்திரி யங்களை வென்று விட்டேன்,
எனதென் ஆசையைக் கொன்று விட்டேன்.

பயனெண் ணாமல் உழைக்கச் சொன்னாள்,
பக்தி செய்து பிழைக்கச் சொன்னாள்;
துயரி லாதெனைச் செய்து விட்டாள்,
துன்ப மென்பதைக் கொய்து விட்டாள்.

மீன்கள் செய்யும் ஒளியைச் செய்தாள்;
வீசி நிற்கும் வளியைச் செய்தாள்;
வான்க ணுள்ள வெளியைச் செய்தாள்,
வாழி நெஞ்சிற் களியைச் செய்தாள்.

## தெய்வப் பாடல்கள்

### 28. நவராத்திரிப் பாட்டு

### (உஜ்ஜயினீ)

உஜ்ஜயினீ நித்ய கல்யாணீ!
ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி
ஓம்சக்தி (உஜ்ஜயினீ)

உஜ்ஜய காரண சங்கர தேவீ
உமா ஸரஸ்வதீ ஸ்ரீ மாதா
ஸா. (உஜ்ஜயினீ)

வாழி புனைந்து மஹேசுவர தேவன்,
தோழி பதங்கள் பணிந்து

துணிந்தனம்,　　　　　　　　　(உஜ்ஜயினீ)

சத்ய யுகத்தை அகத்தி லிருத்தி,
திறத்தை நமக்கரு ளிச்செய்யும்
உத்தமி.　　　　　　　　　(உஜ்ஜயினீ)

### 29. காளிப் பாட்டு

யாதுமாகி நின்றாய்-காளி!-எங்கும்
நீதி றைந்தாய்;
தீது நன்மை யெல்லாம்-காளி!-
தெய்வ லீலை யன்றோ;
பூத மைந்தும் ஆனாய்-காளி!-
பொறிக ளைந்தும் ஆனாய்;
போத மாகி நின்றாய்-காளி!-
பொறியை விஞ்சி நின்றாய்
இன்ப மாகி விட்டாய்-காளி!-என்னு
ளேபு குந்தாய்
பின்பு நின்னை யல்லால்-காளி!-
பிறிது நானும் உண்டோ?
அன்ப ளித்து விட்டாய்-காளி!-
ஆண்மை தந்து விட்டாய்;
துன்பம் நீக்கிவிட்டாய்-காளி!-
தொல்லை போக்கிவிட்டாய்

## தெய்வப் பாடல்கள்

### 30. காளி ஸ்தோத்திரம்

யாதுமாகி நின்றாய்-காளி!-எங்கும் நீதி றைந்தாய்;
தீது நன்மையெல்லாம்-நின்தன்-செயல்க ளன்றி
யில்லை.
போதும் இங்கு மாந்தர்-வாழும்-பொய்மை வாழ்க்கை
யெல்லாம்
ஆதிசக்தி,தாயே!-என் மீ-தருள் புரிந்து காப்பாய்.

எந்த நாளும் நின்மேல்-தாயே!இசைகள் பாடி
வாழ்வேன்;
கந்த னைப்ப யந்தாய்,-தாயே!கருணை வெள்ள
மானாய்!
மந்த மாரு தத்தில்-வானில்-மலையி னுச்சி மீதில்,
சிந்தை யெங்கு செல்லும்-அங்குன்-செம்மை தோன்று
மன்றே

கர்ம் யோக மொன்றே-உலகில்-காக்கு மென்னும்
வேதம்;
தர்ம நீதி சிறிதும்-இங்கே-தவற லென்ப தின்றி,
மர்ம மான பொருளாம்-நின்தன்-மலர டிக்கண் நெஞ்சம்,
செம்மை யுற்று நாளும்-சேர்ந்தே-தேசு கூட வேண்டும்.

என்த னுள்ள வெளியில்-ஞானத்-திரவி யேற
வேண்டும்;
குன்ற மொத்த தோளும்-மேருக்-கோல மொத்த
வடிவும்,
நன்றை நாடு மனமும்-நீயெந்-நாளு மீதல் வேண்டும்;
ஒன்றை விட்டு மற்றோர்-துயரில்-உழலும் நெஞ்சம்
வேண்டா.

வான கத்தி னொளியைக்-கண்டே-மனம கிழ்ச்சி
பொங்கி,
யானெ தற்கும் அஞ்சேன்-ஆகி-எந்த நாளும் வாழ்வேன்;
ஞான மொத்த தம்மா!-உவமை-நானு ரைக்கொ
ணாதாம்!
வான கத்தி னொளியின்-அழகை-வாழ்த்து மாறி
யாதோ?

ஞாயி றென்ற கோளம்-தருமோர்-நல்ல பேரொ ளிக்கே
தேய மீதோர் உவமை-எவரே-தேடி யோத வல்லார்?
வாயி னிக்கும் அம்மா!-அழகாம்-மதியின் இன்ப
ஒளியை
நேயமோ டுரைத் தால்-ஆங்கே-நெஞ்சி ளக்க மெய்தும்.

காளி மீது நெஞ்சம்-என்றும்-கலந்து நிற்க வேண்டும்;
வேளை யொத்த விறலும், பாரில்-வேந்த ரேத்து புகழும்,

யாளி யொத்த வலியும்-என்றும்-இன்பம் நிற்கும் மனமும்,
வாழி யீதல் வேண்டும்-அன்னாய்!வாழ்க நின்தன் அருளே!

### தெய்வப் பாடல்கள்

### 31. யோக சித்தி வரங் கேட்டல்

விண்ணும் கண்ணும் தனியாளும்-எங்கள்
வீரை சகித நினதருளே என்தன்
கண்ணுங் கருதும் எனக்கொண்டு-அன்பு
கசிந்து கசிந்து கசிந்துருகி-நான்
பண்ணும் பூசனை கள்எல்லாம்-வெறும்
பாலை வனத்தில் இட்ட நீரோ?-உனக்
கெண்ணுஞ் சிந்தை யொன்றிலையோ?-அறி
வில்லா தகிலம் அளிப்பாயோ?

நீயே சரணமென்று கூவி-என்தன்
நெஞ்சிற் பேருறுதி கொண்டு-அடி
தாயே!யெனக்குமிக நிதியும்-அறந்
தன்னைக் காகுமொரு திறனும்-தரு
வாயே

### தெய்வப் பாடல்கள்

### 32. மஹா சக்தி பஞ்சகம்

கரணமுந் தனுவும் நினக்கெனத் தந்தேன்,
காளிநீ காத்தருள் செய்யே;
மரணமும் அஞ்சேன்;நோய்களை அஞ்சேன்;
மாரவெம் பேயினை அஞ்சேன்.
இரணமுஞ் சுகமும்,பழியுநற் புகழும்
யாவுமோர் பொருளெனக் கொள்ளேன்;
சரணமென் றுனது பதமலர் பணிந்தேன்
தாயெனைக் காத்தலுன் கடனே.

எண்ணிலாப் பொருளும்,எல்லையில்,வெளியும்

யாவுமா நின்தனைப் போற்றி,
மணிணிலார் வந்து வாழ்த்தினுஞ் செறினும்
மயங்கிலேன்;மனமெனும் பெயர்கொள்
கண்ணிலாப் பேயை எள்ளுவேன்;இனியெக்
காலுமே அமைதியி லிருப்பேன்;
தண்ணிலா முடியிற் புனைந்துநின் றிலகும்
தாயுனைச் சரண்புகுந் தேனால்.

நீசருக் கினிதாந் தனத்தினும், மாதர்
நினைப்பினும்,நெறியிலா மாக்கள்
மாசுறு பொய்ந்நட் பதனிலும், பன்னாள்
மயங்கினேன்;அதையினி மதியேன்;
தேசுறு நீல நிறத்தினாள்,அறிவாய்ச்
சிந்தையிற் குலவிடு திறத்தாள்.
வீசுறுங் காற்றில் நெருப்பினில் வெளியில்
விளங்குவாள் தனைச்சரண் புகுந்தேன்.

ஐயமுந் திகப்புந் தொலைந்தன; ஆங்கே
அச்சமுந் தொலைந்தது;சினமும்
பொய்யுமென் றினைய புன்மைக ளெல்லாம்
போயின; உறுதிநான் கண்டேன்,
வையமிங் கனைத்தும் ஆக்கியும் காத்தும்
மாய்த்துமே மகிழ்ந்திடு தாயைத்
துய்யவெண் ணிறத்தாள் தனைக்கரி யவளைத்
துணையெனத் தொடர்ந்தது கொண்டே.

தவத்தினை எளிதாப் புரிந்தனள், யோகத்
தனிநிலை எளிதெனப் புரிந்தாள்;
சிவத்தினை இனிதாப் புரிந்தனள்,மூடச்
சித்தமும் தெளிவுறச் செய்தாள்;
பவத்தினை வெறுப்ப அருளினள், நானாம்
பான்மை கொன் றவன்மயம் புரிந்தாள்;
அவத்தினைக் களைந்தாள் அறிவென விளைந்தாள்,
அநந்தமா வாழ்கஇங் கவளே!

## தெய்வப் பாடல்கள்

### 33. மஹாசக்தி வாழ்த்து

விண்டு ரைக்க அறிய அரியதாய்
விவிந்த வான வெளியென
நின்றனை;
அண்ட கோடிகள் வானில்
அமைத்தனை;
அவற்றில் எண்ணற்ற வேகஞ்
சமைத்தனை;
மண் டலத்தை அணுவணு
வாக்கினால்,
வருவ தெத்தனை அததனை
யோசனை
கொண்ட தூரம் அவற்றிடை
வைத்தனை,
கோலமே!நினைக் காளியென்
றேத்துவேன்.

நாடு காக்கும் அரசன் தனையந்த
நாட்டு ளோர்அர சென்றறி வார்எனில்,
பாடு தண்டைக் குழந்தை தனக்கிதம்
பண்ணும் அப்பன் அவனென்
றறிந்திடும்;
கோடி யண்டம் இயகி யளிக்கும்நின்
கோலம் ஏழை குறித்திட லாகுமோ?
நாடி யிச்சிறு பூமியிற் காணுநின்
நலங்கள் ஏத்திட நல்லருள் செய்வே.

பரிதி யென்னும் பொருளிடை
யேய்ந்தனை,
பரவும் வெய்ய கதிரெனக்
காய்ந்தனை;
கரிய மேகத் திளெனச் செல்லுவை,
மாலு மின்னென வந்துயிர்
கொல்லுவை;
சொரிய்ம நுரெனப் பல்லுயிர்
போற்றுவை,
சூழும் வெள்ள மெனவுயிர்
மாற்றுவை;

விரியும் நீள்கட லென்ன
நிறைந்தனை,
வெல்க காளி யென தம்மை
வெல்கவே.

வாயு வாகி வெளியை அளந்தனை,
வாழ்வெ தற்கும் உயிர்நிலை
ஆயினை,
தேயு வாகி ஒளிருள் செய்குவை,
செத்த வற்றைக் கருப்பொருள்
ஆக்குவை;
பாயு மாயிரஞ் சக்திக ளாகியே
பாரி லுள்ள தொழில்கள் இயற்றுவை;
சாயும் பல்லுயிர்
கொல்லுனைவ,நிற்பன
தம்மைக் காத்துச் சுகம்பல நல்குவை.

நிலத்தின் கீழ்பல் லுலோகங்கள்
ஆயினை,
நீரின் கீழெண் ணிலாநிதி
வைத்தனை;
தலத்தின் மீது மலையும் நதிகளும்,
சாருங் காடுஞ் சுனைகளும்
ஆயினை;
குலத்தி லெண்ணற்ற பூண்டு
பயிரினம்
கூட்டி வைத்துப் பலநலந்
துய்த்தனை;
புலத்தை யிட்டிங் குயிர்கள்
செய்தாய்,அன்னே!
போற்றி!போற்றி!நினதருள்
போற்றியே!

சித்த சாகரஞ் செய்தனை ஆங்கதிற்
செய்த கர்மப் பயனெனப் பல்கினை;
தத்துகின்ற திரையுஞ் சுழிகளும்
தாக்கி யெற்றிடுங் காற்றுமுள்
ளோட்டமுஞ்
சுத்த மோனப் பகுதியும் வெண்பனி

சூழ்ந்த பாகமும் சுட்டவெந்
நீருமென்று
ஒத்த நீக்கடல் போலப் பலவகை
உள்ள மென்னுங்க கடலில்
அமைந்தனை.

## தெய்வப் பாடல்கள்

### 34. ஊழிக் கூத்து

வெடிபடு மண்டத் திடிபல தாளம் போட-
வெறும்
வெளியி லிரத்தக் கயொடு பூதம் பாட-
பாட்டின்
அடிபடு பொருளின் அடிபடு மொலியிற்
கூடக்-களித்
தாடுங் காளீ!சாமுண் டீ!கங் காளீ!
அன்னை!அன்னை!ஆடுங் கூத்தை
நாடச் செய்தாய் என்னை.

ஐந்துறு பூதம் சிந்திப் போயொன் றாகப்-
பின்னர்
அதுவும் சக்திக் கதியில் மூழ்கிப் போக-
அங்கே
முந்துறும் ஒளியிற் சிந்தை நழுவும் வேகத்-
தோடே
முடியா நடனம் புரிவாய,அடு தீ சொரிவாய்!
அன்னை!அன்னை!ஆடுங் கூத்தை
நாடச் செய்தாய் என்னை.

பாழாம் வெளியும் பதறிப் போய்மெய்
குலையச்-சலனம்
பயிலும் சக்திக் குலமும் வழிகள் கலைய-
அங்கே
ஊழாம் பேய்தான்"ஓஹோ ஹோ"வென்
றலைய;-வெறித்
துறுமித் திரிவாய்,செருவெங் கூத்தே
புரிவாய்!

அன்னை!அன்னை!ஆடுங் கூத்தை
நாடச் செய்தாய் என்னை.

சத்திப் பேய்தான் தலையொடு தலைகள்
முட்டிச்-சட்டச்
சடசட சட்டெனுடைபடு தாளங்கொட்டி-
அங்கே
எத்திக் கினிலும் நின்விழி யனல் போய்
எட்டித்-தானே
எரியுங் கோலங் கண்டே சாகும் காலம்.
அன்னை!அன்னை!ஆடுங் கூத்தை
நாடச் செய்தாய் என்னை.

காலத் தொடுநிர் மூலம் படுமூ வுலகும்-
அங்கே
கடவுள் மோனத் தொளியே தனியா
யிலகும்-சிவன்
கோலங் கண்டுன் கனல்செய் சினமும்
விலகும்-கையைக்
கொஞ்சித் தொடுவாய் ஆனந்தக்கூத்
திடுவாய்!
அன்னை!அன்னை!ஆடுங் கூத்தை
நாடச் செய்தாய் என்னை.

## தெய்வப் பாடல்கள்

### 35. காளிக்குச் சமர்ப்பணம்

இந்த மெய்யும் கரணமும் பொறியும்
இருபத் தேழு வருடங்கள் காத்தனன்;
வந்த னம்;அடி பேரருள் அன்னாய்!
வைர வீ! திறற் சாமுண்டி! காளி!
சிந்த னைதெளிந் தேனினி யுன்தன்
திரு வருட்கென அர்ப்பணஞ் செய்தேன்;
வந்தி ருந்து பலபய னாகும்

வகைதெ ரிந்துகொள் வாழி யடி!நீ.

## தெய்வப் பாடல்கள்

### 36. காளி தருவாள்

எண்ணி லாத பொருட்குவை தானும்,
ஏற்றமும், புவி யாட்சியும் ஆங்கே
விண்ணில் ஆதவன் நேர்ந்திடும்
ஒளிம்
வெம்மை யும்பெருந் திணமையும்
அறிவும்,
தண்ணி லாவின் அமைதியும்
அருளும்
தருவள் இன்றென தன்னை
யென்காளி;
மண்ணி லார்க்குந் துயரின்றிச்
செய்வேன்,
வறுமை யென்பதை மண்மிசை
மாய்ப்பேன்.

தானம் வேள்வி தவங்கல்வி யாவும்
தரணி மீதில் நிலைபெறச் செய்வேன்,
வானம் மூன்று மழைதரச் செய்வேன்
மாறி லாத வளங்கள் கொடுப்பேன்;
மானம் வீரியம் ஆண்மை
நன்னேர்மை
வண்மை யாவும் வழங்கறச்
செய்வேன்,
நான்வி ரும்பின காளி தருவாள்.

## தெய்வப் பாடல்கள்

### 38. வெற்றி

எடுத்த காரியம் யாவினும் வெற்றி,
எங்கு நோக்கினும் வெற்றிமற் றாங்கே
விடுத்த வாய்மொழிக் கெங்கணும் வெற்றி,
வேண்டி னேனுக் கருளினள் காளி;
தடுத்து நிற்பது தெய்வத மேனும்
சாகு மானுட மாயினும் அஃதைப்
படுத்து மாய்பபள் அரட்பெருங் காளி,
பாரில் வெற்ற எனக்குறு மாறே.

எண்ணு மெண்ணங்கள் யாவினும் வெற்றி,
எங்கும் வெற்றி, எதனிலும் வெற்றி,
கண்ணு மாயிரு ரும்மென நின்றாள்
காளத் தாயிங் கெனக்கருள் செய்தாள்;
மண்ணும் காற்றும் புனலும் அனலும்
வானும் வந்து வணங்கிநில் லாவோ?
விண்ணு ளோர்பணிந் தேவல்செய் யாரோ?
வெல்க காளி பதங்களென் பார்க்கே.

## தெய்வப் பாடல்கள்

### 39. முத்துமாரி

உலகத்து நாயகியே!-எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
உன் பாதம் சரண்பகுந்தோம்,-எங்கள்
முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
கலகத் தரக்கர்பலர்,-எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
கருத்தி னுற்றே புகுந்துவிட்டார்,-எங்கள்
முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
பலகற்றும் பலகேட்டும்-எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
பய னொன்று மில்லையடி-எங்கள்
முத்து

மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
நிலையெங்கும் காணவில்லை,-எங்கள்
முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
நின்பாதம் சரண் புகுந்தோம்,-எங்கள்
முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!

துணிவெளுக்க மண்ணுண்டு,-எங்கள்
முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
தோல்வெளுக்கச் சாம்பருண்டு,-எங்கள்
முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
மணி வெளுடக்கச் சாணையுண்டு,-
எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
மனம்வெளுக்க வழியில்லை,-எங்கள்
முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
பிணிகளுக்கு மாற்றுண்டு,-எங்கள்
முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
பேதைமைக்கு மாற்றில்லை,-எங்கள்
முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
அணிகளுகொ ரெல்லையில்லாய்,-
எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
அடைக்கலமிங் குனைப்புகுந்தோம்,-
எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!

## தெய்வப் பாடல்கள்

### 40. தேச முத்துமாரி

தேடியுனைச் சரணடைந்தேன்,தேச முத்து மாரி!
கேடதனை நீக்கிடுவாய், கேட்டவரந் தருவாய்

பாடியுனைச் சரணடைந்தேன் பாசமெல்லாங்
களைவாய்;
கோடிநலஞ் செய்திடுவாய்,குறைகளெல்லாந்
தீர்ப்பாய்

எப்பொழுதும் கவலையிலே இணங்கி நிற்பான் பாவி;
ஒப்பியுன தேவல்செய்வேன் உனதருளால்
வாழ்வேன்

சக்தி யென்று நேர மெல்லாந் தமிழ்க் கவிதை பாடி,
பக்தியுடன் போற்றி நின்றால் பயமனைத்துந் தீரும்

ஆதாரம் சக்தி யென்றே அருமறைகள் கூறும்;
யாதானுந் தொழில் புரிவோம்;யாதுமவள்
தொழிலாம்

துன்பமே இயற்கையெனும் சொல்லைமறந்
திடுவோம்;
இன்பமே வேண்டி நிற்போம்;யாவுமவள் தருவாள்

நம்பினார் கெடுவ தில்லை;நான்கு மறைத் தீர்ப்பு;
அம்பி கையைச் சரண் புகுந்தால் அதிகவரம்
பெறலாம்.

## தெய்வப் பாடல்கள்

### 41. கோமதி மஹிமை

தாருக வனத்தினிலே-சிவன்
சரணநன் மலரிடை யுளம்பதித்துச்
சீருறத் தவம் புரிவார்-பர
சிவன்பு கழமுதினை அருந்திடுவார்;

பேருயர் முனிவர் முன்னே-கல்விப்
பெருங்கடல் பருகிய சூதனென்பான்

தேருமெய்ஞ் ஞனத்தினால்-உயர்
சிவனிகர் முனிவரன் செப்புகின்றான்.

"வாழிய முனிவர்களே!-புகழ்
வளர்ந்திடுஞ் சங்கரன் கோயிலிலே,
உழியைச் சமைத்த பிரான்;-இந்த
உலக மெலாமுருக் கொண்டபிரான்,
ஏழிரு புவன்ததிலும்-என்றும்
இயல்பெரும் உயிகளுக் குயிராவான,
ஆழுநல் லறிவாவான்,-ஒளி
யறிவிக் கடந்தமெய்ப் பொருளாவான்.

தேவர்க் கெலாந்தேவன்;-உயர்
சிவபெரு மான்பண்டொர் காலத்திலே
காவலி னுலகளிக்கும்-அந்தக்
கண்ணனுந் தானுமிங் கோருருவாய்,
ஆவசெல டருந்தவங்கள்-பல
ஆற்றிய நாகர்கள் இருவர் முன்னே
மேவிநின் றருள்புரிந்தான்,-அந்த
வியப்புறு சரிதையை விளம்புகின்றேன்.

கேளீர்,முனிவர்ளே!-இந்தக்
கீர்த்திகொள் சரிதையைக் கேட்டவர்க்கே
வேள்விகள் கோடி செய்தால்-சதுர்
வேதங்க ளாயிரமுறை படித்தால்,
மூளுநற் புண்ணியந்தான்-வந்து
மொய்த்திடும்;சிவனியல் விளங்கிநிற்கும்;
நாளுநற் செல்வங்கள்-பல
நணுகிடும்;சரதமெய் வாழ்வுண்டாம்.

இக்கதை உரைத்திடுவேன்,-உளம்
இன்புறக் கேட்பீர்,முனிவர்களே!
நக்க பிரினருளால்-இங்கு
நடைபெறு முலகங்கள் கணக்கிலவாம்!
தொக்கன அண்டங்க்ள்-வளர்
தொகைபல கோடிபல் கோடிகளாம்!
இக்கணக் கெவர றிவார்?-புவி
எத்தனை யுளதென்ப தியார றிவார்?

நக்க பிரான றிவான்;-மற்று
நானறி யேன்பிற நரரறியார்;
தொக்க பேரண்டங்கள்-கொண்ட
தொகைக்கெல்லை யில்லையென்று சொல்லுகின்ற
தக்கபல் சாத்திரங்கள்;ஒளி
தருகின்ற வானமொர் கடல்போலாம்;
அக்கடலதனுக்கே-எங்கும்
அக்கரை யிக்கரை யொன்றில்லையாம்.

இக்கட லதனக்தே-அங்கங்
கிடையிடைத் தான்றும்புன் குமிழிகள்போல்
தொக்கன உலகங்கள்-திசைத்
தூவெளி யதனிடை விரைந்தோடம்
மிக்கதொர் வியப்புடைத்தாம்-இந்த
வியன்பெரு வையத்தின் காட்சி,கண்டீர்
மெய்ககலை முனிவர்களே!-இதன்
மெய்ப்பொருள் பரசிவன்சக்தி,கண்டீர்!

எல்லை யுண்டோ இலையோ?-இங்கு
யாவர் கண்டார்திசை வெளியினக்கே?
சொல்லுமொர் வரம்பிட்டால்-அதை

* * * *
(இது முற்றுப் பெறவில்லை)

## தெய்வப் பாடல்கள்

### 42. சாகா வரம்

பல்லவி

சாகாவர மருள்வாய், ராமா!
சதுர்மறை நாதா!-சரோஜ பாதா!

சரணங்கள்

ஆகாசந் தீகால் நீர்மண்
அத்தனை தமும் ஒத்து நிறைந்தாய்
ஏகாமிர்த மாகிய நித்ள்
இணைசர ணென்றால் இதுமுடி

யாதா? (சாகா)

வாகார்தோள் வீரா, தீரா,
மன்மத ரூபா, வானவர் பூபா,
பாகார்மொழி சீதையுன் மென்தோள்
பழகிய மார்பா! பதமலர்
சார்பா! (சாகா)

நித்யா,நிர்மலா,ராமா
நிஷ்க ளங்கா, சர்வா தாரா,
சத்யா, சநாதநா,ராமா,
சரணம்,சரணம்,சரண
முதாரா! (சாகா)

## தெய்வப் பாடல்கள்

### 43. கோவிந்தன் பாட்டு

கண்ணி ரண்டும் இமையாமல் செந்நிறத்து
மெல்லிதழ்ப்பூங் கமலத் தெய்வப்
பெண்ணிரண்டு விழிகளைஹயம் நோக்கிடுவாய்
கோவிந்தா! பேணி னோர்க்கு
நண்ணிரண்டு பொற்பாத மளித்தருள்வாய்
சராசரத்து நாதா! நாளும்
எண்ணிரண்டு கோடியினும் மிப்பலவாம்
வீண்கவலை எளிய னேற்கே.

எளியனேன் யானெனலை எப்போது
போக்டுவாய்,இறைவ னே!இவ்
வளியிலே பறவையிலே மரத்தினிலே
முகிலினிலே வரம்பில் வான
செளியிலே கடலிடையே மண்ணகத்தே
வீதியிலே வீட்டி லெல்லாம்
களியிலே, கோவிந்தா!நினைக்கண்டு
நின்னொடுநான் கலப்ப தென்றோ?

என்கண்ணை மறதுனிரு கண்களையே
என்னகத்தில் இசைத்துக்கொண்டு
நின்கண்ணாற் புவியெல்லாம் நீயெனவே

நான்கண்டு நிறைவு கொண்டு
எவனகண்மை மறதியுடன் சோம்பர்முதற்
பாவமெலாம் மடிந்து,நெஞ்சிற்
புன்கண்போய் வாழ்ந்திடவே, கோவிந்தா!
என்க்கமுதம் புகட்டு வாயே.

## தெய்வப் பாடல்கள்

### 44. கண்ணனை வேண்டுதல்

வேத வானில் விளங்கி"அறஞ்செய்மின்,
சாதல் நேரினுஞ் சத்தியம் பூணுமின்,
தீத கற்றுமின்"என்று திசையெல்லாம்
மோத நித்தம் இடித்து முழுங்கியே.

உண்ணுஞ் சாதிக் குறக்கமும் சாவுமே
நண்ணு றாவணம் நன்கு புரந்திடும்
எண்ண ரும்புகழ்க் கீதையெனச் சொலும்
பண்ண மிழ்தத் தருள்மழை பாலித்தே,

எங்க ளாரிய பூமி யெனும்பயிர்
மக்க ளம்பெற நித்தலும் வாழ்விக்கும்
துங்க முற்ற துணைமுகி லே! மலர்ச்
செங்க ணாய்நின் பதமலர் சிந்திப்பாம்

வீரர் தெய்வதம் கர்ம விளக்குநற்
பார தர்செய் தவத்தின் பயனெ னும்
தார விர்ந்த தடம்புயக் பாத்தனோர்
கார ணம்மெனக் கொண்டு கடவுள்நீ.

நின்னை நம்பி நிலத்திடை யென்றுமே
மன்னு பாரத மாண்குலம் யாவிற்கும்
உன்னுங் காலை உயர்துணை யாகவே
சொன்ன சொல்லை யுயிரிடைச் சூடுவோம்.

ஐய கேளினி யோர்சொல் அடியர்யாம்
உய்ய நின்மொழி பற்றி யோழுகிய
மைய றும்புகழ் வாழ்க்கை பெறற்கெனச்
செய்யும் செய்கையி னின்னருள் சேர்பையால்.

ஒப்பி லாத உயர்வொடு கல்வியும்
எய்ப்பில் வீரமும் இப்புவி யாட்சியும்
தப்பி லாத தருமமுங் கொண்டுயாம்
அப்ப னேநின் னடிபணிந் துய்வமால்.

மற்று நீயிந்த வாழ்பு மறுப்பையேல்
சற்று நேரத்துள் எம்முயிர் சாய்த்தருள்
கொற்ற வா!நின் குவலய மீதினில்
வெற்று வாழ்க்கை விரும்பி யழிகிலேம்.

நின்தன் மாமர பில்வந்து நீசராய்ப்
பொன்றல் வேண்டிலம் பொற்கழ லாணைகாண்
இன்றிங் கெம்மை யதம்புரி, இல்லையேல்
வென்றி யும்புக ழுந்தரல் வேண்டுமே.

## தெய்வப் பாடல்கள்

### 45. வருவாய் கண்ணா!

பல்லவி

வருவாய் வருவாய் வருவாய்-கண்ணா!
வருவாய் வருவாய் வருவாய்!

சரணங்கள்

உருவாய் அறிவில் ஒளிர்வாய்-கண்ணா!
உயிரின் னமுதாய்ப் பொழிவாய்-கண்ணா!
கருவாய் என்னுள் வளர்வாய்-கண்ணா!
கமலத் திருவோ டிணைவாய்-கண்ணா! (வருவாய்)

இணைவாய் எனதா வியிலே-கண்ணா!
இதயத் ரிதனிலே யமர்வாய்-கண்ணா!
கணைவா யசரர் தலைகள்-சிதறக்
கடையூ ரியிலே படையோ டெழுவாய்! (வருவாய்)

எழுவாய் கடல்மீ தினிலே-எழுமோர்

இரவிக் கணையா உளமீ தினிலே
தொழுவேன் சிவனாம் நினையே-கண்ணா!
துணையே அமரர் தொழும் வானவனே! (வருவாய்)

## தெய்வப் பாடல்கள்

### 46. கண்ண பெருமானே!

காயிலே புளிப்பதென்னே கண்ண பெருமானே!-நீ
கனியிலே இனிப்பதென்னே? கண்ண பெருமானே!
நோயிலே படுப்பதென்னே? கண்ண பெருமானே!-நீ
நோன்பிலே உயிர்ப்பதென்னே?கண்ண பெருமானே!

காற்றிலே குளிர்ந்ததென்னே?கண்ண பெருமானே!-நீ
கனலிலே சுடுவதென்னே? கண்ண பெருமானே!
சேற்றிலே குழம்பலென்னே? கண்ண பெருமானே!
திக்கிலே தெளிந்ததென்னே? கண்ண பெருமானே!

ஏறிறிநின்னைத் தொழுவதென்னே? கண்ண பெருமானே!நீ
எளியர்தம்மைக் காப்பதென்னே? கண்ண பெருமானே!
போற்றினோரைக் காப்பதென்னே!கண்ண பெருமானே!நீ
பொய்யர் தம்மை மாய்ப்பதென்னே?கண்ண பெருமானே!

வேறு

போற்றி!போற்றி!போற்றி!போற்றி!
கண்ண பெருமானே!-நீ
பொன்னடி போற்றி நின்றேன்
கண்ண பெருமானே!

## தெய்வப் பாடல்கள்

### 47. நந்த லாலா

ராகம்-யதுகுல காம்போதி தாளம்-ஆதி

காக்கைச் சிறகினிலே நந்த லாலா!-நின்தன்
கரியநிறந் தோன்று தையே நந்த லாலா!
பார்க்கும் மரங்க ளெல்லாம் நந்த லாலா!-நின்தன்
பச்சை நிறந் தோன்று தையே நந்த லாலா!

கேட்கு மொலியி லெல்லாம் நந்த லாலா!-நின்தன்
கீத மிசக்குதடா நந்த லாலா!
தீக்குள் விரலை வைத்தால் நந்த லாலா!-நின்னைத்
தீண்டு மின்பந் தோன்று தடா நந்த லாலா!

## தெய்வப் பாடல்கள்

### 48. கண்ணன் பிறப்பு

கண்ணன் பிறந்தான்-எங்கள்
கண்ணன் பிறந்தான்-இந்தக்
காற்றதை யெட்டுத் திசையிலுங் கூறிடும்.

தின்ன முடையான்-மணி
வண்ண முடையான்-உயர்
தேவர் தலைவன் புவிமிசைத் தோன்றினன்

பண்ணை யிசைப்பீர்-நெஞ்சிற்
புண்ணை யொரிப்பீர்-இந்தப்
பாரினிலே துயர் நீங்கிடும் என்றிதை

எண்ணிடைக் கொள்வீர்-நன்கு
கண்ணை விழிப்பீர்-இனி
ஏதுங் குறைவில்லை;வேதம் துணையுண்டு,

(கண்ணன் பிறந்தான்)

அக்கினி வந்தான்-அவன்
திக்கை வளைத்தான்-புவி
யாரிருட் பொய்மைக் கலியை மடித்தனன்

துக்கங் கெடுத்தான்-சுரர்
ஒக்கலும் வந்தார்-சுடர்ச்
சூரியன்,இந்திரன்,வாயு,மருத்துக்கள்

மிக்க திரளாய்-சுரர்
இக்கணந் தன்னில்-இங்கு
மேவி நிறைந்தனர்;பாவி யசுரர்கள்

பொக்கென வீழ்ந்தார்,-உயிர்
கக்கி முடிந்தார்-கடல்
போல ஒலிக்குது வேதம் புவிமிசை.

(கண்ணன் பிறந்தான்)

சங்கரன் வந்தான்-இங்கு
மங்கல மென்றான்-நல்ல
சந்திரன் வந்தின் னமுதைப் பொழிந்தனன்

பங்க மொன் றில்லை-ஒளி
மங்குவ தில்லை-இந்தப்
பாரின்கண் முன்பு வானத்திலே நின்று

கங்கையும் வந்தாள்-கலை
மங்கையும் வந்தாள்-இன்பக்
காளி பராசக்தி அன்புட னெய்தினள்

செங்கம லத்தாள்-எழில்
பொங்கு முகத்தாள்-திருத்
தேவியும் வந்து சிறப்புற நின்றனள்.

(கண்ணன் பிறந்தான்)

## தெய்வப் பாடல்கள்

### 49. கண்ணன் திருவடி

கண்ணன் திருவடி, எண்ணுக மனமே
திண்ணம் அழியா, வண்ணந் தருமே,

தருமே நிதியும்,பெருமை புகழும்
கருமா மேனிப்,பெருமா னிங்கே,

இங்கே யமரர்,சங்கந் தோன்றும்
மங்கும் தீமை,பொங்கும் நலமே.

நலமே நாடிற்,புலவீர் பாடீர்;
நிலமா மகளின்,தலைவன் புகழே.

புகழ்வீர் கண்ணன்,தகைசே ரமரர்

தொகையோ யசருப்,பகைதீர்ப் பதையே

தீர்ப்பான் இருளைப் பேர்ப்பான் கலியை
ஆர்பபா ரமரர்,பார்ப்பார் தவமே.

தவறா துணர்வீர்,புவியீர் மாலும்
சிவனும் வானோர்,எவரும் ஒன்றே

ஒன்றே பலவாய், நின்றோர் சக்தி
என்றுந் திகழும், குன்றா வொளியே

## தெய்வப் பாடல்கள்

### 50. வேய்ங் குழல்

ராகம்-ஹிந்துஸ்தான் தோடி தாளம்-ஏகதாளம்

எங்கிருந்து வருகுவதோ?-ஒலி
யாவர் செய்குவ தோ?-அடி தோழி!

குன்றி னின்றும் வருகுவதோ?-மரக்
கொம்பி னின்றும் வருகுவதோ?-வெளி
மன்றி னின்று வருகுவதோ?-என்தன்
மதி மருண்டிடச் செய்குதடி-இஃது, (எங்கிருந்து)

அலையொ லித்திடும் தெய்வ-யமுனை
யாறி னின்றும் ஒலுப்பதுவோ?-அன்றி
இலையொ லிகும் பொழிலிடை நின்றும்
எழுவதோ இஃதின்ன முதைப்போல்? (எங்கிருந்து)

காட்டி னின்றும் வருகுவதோ?-நிலாக்
காற்றிக் கொண்டு தருகுவதோ?-வெளி
நாட்டி னின்றுமித் தென்றல் கொணர்வதோ?
நாதமிஃதென் உயிரை யுருக்குதே! (எங்கிருந்து)

பறவை யேதுமொன் றுள்ளதுவோ!-இங்ஙன்
பாடுமோ அமுதக்கனற் பாட்டு?

மறைவினிறுங் கின்னர ராதியர்
வாத்தியதினிசை யிதுவோ அடி! (எங்கிருந்து)

கண்ண னூதிடும் வேய்ங்குழல தானடீ!
காதி லேயமு துள்ளத்தில் நஞ்சு,
பண்ணன் றாமடி பாவையர் வாடப்
பாடி யெய்திடும் அம்படி தோழி! (எங்கிருந்து)

## தெய்வப் பாடல்கள்

### 51. கண்ணம்மாவின் காதல்

காற்று வெளியிடைக் கண்ணம்மா!-நின்தன்
காதலை யெண்ணிக் களிக்கின்றேன்;-அமு
தூற்றினை யொத்த இதழ்களும்-நில
வூறித் ததும்பும் விழிகளும்-பத்து
மாற்றுப்பொன் னொத்தநின் மேனிம்-இந்த
வையத்தில் யானுள்ள மட்டிலும்-எனை
வேற்று நினைவின்றித் தேற்றியே-இங்கொர்
விண்ணவ னாகப் புரியுமே!-இந்தக் (காற்று வெளி)

நீயென தின்னுயிர் கண்ணம்மா!-எந்த
நேரமும் நின்தன்ப் போற்றுவேன்-தயர்
போயின போயின துன்பங்கள்-நினைப்
பொன்னெனக் கொண்ட பொழுதிலே-என்தன்
வாயினி லேயமு தூறுதே-கண்ணம்
மாவென் றபேர்சொல்லும் போழ்திலே-உயிர்த்
தீயினி லேவளர் சோதியே!-என்தன்
சிந்தனையே என்தன் சித்தமே!-இந்தக் (காற்று வெளி)

## தெய்வப் பாடல்கள்

### 52. கண்ணம்மாவின் நினைப்பு

பல்லவி

நின்னை யே ரதியென்று நினைக்கிறேனடி-கண்ணம்மா!
தன்னையே சகியென்று

சரணமெய்தினேன்!                    (நின்னையே)

சரணங்கள்

பொன்னை யே நிகர்த்த மேனி மின்னை ய, நிகர்த்த
சாயற்
பின்னை யே!-நித்ய கன்னியே!
கண்ணம்மா!                    (நின்னையே)

மார னம்புக ளென்மீது வாரி வாரி வீச நீ-கண்
பாரா யோ? வந்த சேரா யோ?
கண்ணம்மா?                    (நின்னையே)

யாவு மே சுக முனிக் கொர் ஈசனா னெக்குன் தோற்றம்
மேவு மே-இங்கு யாவு
மே,கண்ணம்மா!                    (நின்னையே)

## தெய்வப் பாடல்கள்

### 53. மனப் பீடம்

பல்லவி

பீடத்தி லேறிக் கொண்டாள்-மனப்
பீடத்தி லேறிக் கொண்டாள்.

சரணங்கள்

நாடித் தவம் புரிந்து பீடுற்ற முனிவரர்
கேடற்ற தென்று கண்டு கூடக் கருது மொளி
மாடத்தி லேறி ஞானக்ச கூடத்தில் விளையாடி
ஓடத் திருந்து கன்னி வேடத்தி ரதியைப்போல்,
ஈடற்ற கற்பனைகள் காடுற்ற சிந்தனைகள்
மூடிக் கிடக்கு நெஞ்சின் ஊடுற் றதை யமரர்
தேடித் தவிக்கு மின்ப வீடொத் தினிமைசெய்து
வேடத்தி சிறுவள்ளி வித்தையென்
கண்ணம்மா                    (பீடத்தி)

கண்ணன் திருமார்பிற் கலந்த கமலை யென்கோ?
விண்ணவர் தொழுதிடும் வீரச் சிங்காதனத்தே
நண்ணிச் சிவனுடலை நாடுமவ ளென்கோ?
எண்ணத்துதிக்குதடா இவள்பொன் னுடலமுதம்!

பெண்ணி லரசியிவள் பெரிய எரி லுடையாள்
கண்ணுள் கணியெனக்குக் காத லிரதியிவள்
பண்ணி லினிய சுவை பரந்த மொழியினாள்
உண்ணு மிதழமுற ஊற்றினள்
கண்ணம்மா (பீடத்தி)

## தெய்வப் பாடல்கள்

### 54. கண்ணம்மாவின் எழில்

ராகம்-செஞ்சுருட்டி தாளம்-
ரூபகம்

பல்லவி

எங்கள் கண்ணம்மா நகை புது ரோஜாப் பூ;
எங்கள் கண்ணம்மா விழி இந்த்ர நீலப் பூ!
எங்கள் கண்ணம்மா முகஞ் செந்தாமரைப் பூ;
எங்கள் கண்ணம்மா நுதல் பால சூர்யன்.

சரணங்கள்

எங்கள் கண்ணம்மா எழில் மின்னலை நேர்க்கும்;
எங்கள் கண்ணம்மா புருவங்கள் மதன் விற்கள்;
திங்களை மடிய பாம்பினைப் போலே
செறிகுழல்,இவள் நாசி எட்
பூ (எங்கள்)

மங்கள வாக்கு நித்யானந்த ஊற்று;
மதரு வாய் அமிர்தம்;இத ழமிர் தம்;
சங்கீத மென் குரல் சரஸ்வதி வீணை
சாய லரம்பை; சதுர்
அயிராணி. (எங்கள்)

இங்கித நாத நிலைய மிருசெவி
சங்கு நிகர்த்த கண்டம் அமிர்த சங்கம்;
மங்களக் கைகள் மஹர் சக்தி வாசம்;
வயி ராலிலை,இடை அமிர்த
வீடு. (எங்கள்)

சங்கரனைத் தாங்கு நந்தி பத சதுரம்;

தாமரை யிருதாள் லக்ஷ்மீ பீடம்;
பொங்கித் ததும்பித் திசை யெங்கும் பாயும்
புத்தன்பும் ஞானமும் மெய்த்திருக்
கோலம் (எங்கள்)

## தெய்வப் பாடல்கள்

### 55. திருக் காதல்

திருவே! நினைக்காதல்கொண் டேனே-நினது திரு
வுருவே மறவாதிருந் தேனே-பல திசையில்
தேடித் திரிந்நிளைத் தேனே-நினக்கு மனம்
வாடித் தினங்களைதேனே-அடி,நினது
பருவம் பொறுத்திருந் தேனே-மிகவும் நம்பிக்
கருவம் படைத்திருந்தேனே-இடை நடுவில்
பையச் சதிகள்செய் தாயே-அதனிலுமென்
மையல் வளர்தல்கண் நல் காயே-நினதருளில்
உய்யக் கருணைசெய் வாயே-பெருமைகொண்டு
வையந் தழைக்கவைப் பேனே-அமரயுகஞ்
செய்யத் துணிந்துநிற் பேனே-அடியெனது
தேனே! என திரு கண்ணே!-எனையுகந்து
தானே வருந் திருப்-பெண்ணே!

## தெய்வப் பாடல்கள்

### 56. திருவேட்கை

ராகம்-நாட்டை தாளம்-சதுஸ்ர ஏகம்

மலரின் மேவு திருவே!-உன் மேல்
யைல் பொங்கி நின்றேன்;
நிலவு செய்யும் முகமும்-காண்பார்
நினைவ ழிக்கும் விழியும்,
கலக லென்ற மொழியும்-தெய்வக்
களிது லங்கு நகையும்,
இலகு செல்வ வடிவும்-கண்டுன்
இன்பம் வேண்டு கின்றேன்

கமல மேவு திருவே!-நின்மேல்

காதலாகி நின்றேன்.
குமரி நின்னை இங்கே-பெற்றோர்
கோடி யின்ப முற்றார்;
அமரர் போல வாழ்வேன்,-என்மேல்
அன்பு கொள்வை யாயின்
இமமய வெற்பின் மோத,-நின்மேல்
இசைகள் பாடி வாழ்வேன்.

வாணி தன்னை என்றும்-நினது
வரிசை பாட வைப்பேன்!
நாணி யேக லாமோ?-என்னை
நன்க றிந்தி லாயோ?
பேணி வைய மெல்லாம்-நன்மை
பெருக வைக்கும் விரதம்
பூணு மைந்த ரெல்லாம்-கண்ணன்
பொறிக ளாவ ரன்றோ?

பொன்னும் நல்ல மணியும்-சுடர்செய்
பூண்க ளேந்தி வந்தாய்!
மின்னு நின்தன் வடிவிற்-பணிகள்
மேவி நிற்கும் அழகை
என்னு ரைப்ப னேடீ!-திருவே!
என்னு யிக்கொ ரமுதே!
நின்னை மார்பு சேரத்-தழுவி
நிக ரிலாது வாழ்வேன்.
செல்வ மெட்டு மெய்தி-நின்னாற்
செம்மை யேறி வாழ்வேன்;
இல்லை என்ற கொடுமை-உலகில்
இல்லை யாக வைப்பேன்;
முல்லை போன்ற முறுவல்-காட்டி
மோக வாதை நீக்கி,
எல்லை யற்ற சுவையே!-எனை நீ
என்றும் வாழ வைப்பாய்.

## தெய்வப் பாடல்கள்

### 57. திருமகள் துதி

ராகம்-சக்கரவாகம் தாளம்-திஸ்ரஏகம்

நித்தமுனை வேண்டி மனம்
நினைப்ப தெல்லாம் நீயாய்ப்
பித்தனைப்போல் வாழ்வதிலே
பெருமையுண்டோ? திருவே!
சித்தவுறுதி கொண்டிருந்தார்
செய்கை யெல்லாம் வெற்றி கொண்டே
உத்தமநிலை சேர்வ ரென்றே
உயர்ந்த வேதமுரைப்ப தெல்லாம்,
சுத்த வெறும் பொய்யோடீ?
சுடர் மணியே!திருவே!
மெத்த மையல் கொண்டு விட்டேன்
மேவிடுவாய்,திருவே!

உன்னையன்றி இன்ப முண்டோ
உலகமிசை வேறே!
பொன்னை வடிவென் றுடையாய்
புத்தமுதே,திருவே!
மின்னொளி தருநன் மணிகள்
மேடை யுயர்ந்த மாளிகைகள்
வன்ன முடைய தாமரைப் பூ
மணிக்குள முள்ள சோலைகளும்,
அன்ன நறு நெய் பாலும்
அதிசயமாத் தருவாய்!
நின்னருளை வாழ்த்தி என்றும்
நிலைத்திருப்பேன்,திருவே!

ஆடுகளும் மாடுகளும்
அழகுடைய பரியும்
வீடுகளும் நெடுநிலமும்
விரைவினிலே தருவாய்!
ஈடு நினக்கோர் தெய்வமுண்டோ?
எனக்குனை யன்றிச் சரணுமுண்டோ?
வாடு நிலத்தைக் கண் டிரங்கா
மழையினைப் போல் உள்ள முண்டோ
நாடு மணிச் செல்வ மேல்லாம்
நன்கருள்வாய், திருவே!
பீடுடைய வான் பொருளே
பெருங் களியே, திருவே!

## 58. திருமகளைச் சரண் புகுதல்

மாதவன் சக்தியினைச்-செய்ய
மலர்வளர் மணியினை வாழ்த்திடுவோம்;
போதுமிவ் வறுமையெலாம்-எந்தப்
போதிலுஞ் சிறுமையின் புகைதனிலே
வேதனைப் படுமனமும்-உயர்
வேதமும் வெறுப்புறச் சோர்மதியும்
வாதனை பொறுக்கவில்லை-அன்னை
மாமக ளடியிணை சரண் புகுவோம்.

கீழ்களின் அவமதிப்பும்-தொழில்
கெட்டவ னிணக்கமும் கிணற்றினுள்ளே
மூழ்கிய விளக்கினைப் போல்-செய்யும்
முயற்சியெல் லாங்கெட்ட முடிவதுவும்,
ஏழ்கட லோடியுமோர்-பயன்
எய்திட வழியின்றி இருப்பதுவும்,
வீழ்கஇக்கொடு நோய்தான்-வைய
மீதினில் வறுமையோர் கொடுமை யன்றோ?

பாற்கட லிடைப் பிறந்தாள்-அது
பயந்தநல் லமுதத்தின் பான்மைகொண்டாள்;
ஏற்குமோர் தாமரைப்பூ-அதில்
இணைமலர்த் திருவடி இசைந்திருப்பாள்;
நாற்கரந் தானுடையாள்-அந்த
நான்கினும் பலவகைத் திருவுடையாள்;
வேற்கரு விழியுடையாள்-செய்ய
மேனியள் பசுமையை விரும்பிடுவாள்.

நாரணன் மார்பினிலே-அன்பு
நலமுற நித்தமும் இணைந்திருப்பாள்;
தோரணப் பந்தரிலும்-பசுத்
தொழுவிலும் சுடர்மணி மாடத்திலும்,
வீரர்தந் தோளினிலும்-உடல்
வெயர்திட உழைப்பவர் தொழில்களிலம்
பாரதி சிரத்தினிலும்-ஒளி

பரவிட வீற்றிருந் தருள் புரிவாள்.

பொன்னிலும் மணிகளிலும் -நறும்
பூவிலும் சாந்திலும் விளக்கினிலும்,
கன்னியர் நகைப்பினிலும்-செழுங்
காட்டிலும் பொழிலிலம் கழனியிலம்,
முன்னிய தணிவினிலும்-மன்னர்
முகத்திலும் வாழ்ந்திடும் திருமகளைப்
பன்னிநற் புகழ்பாடி-அவள்
பதமலர் வாழ்த்திநற் பதம்பெறு வோம்.

மண்ணினுட் கனிகளிலும்-மலை
வாய்ப்பிலும் வார்கட லாழத்திலும்,
புண்ணிய வேள்வியிலும்-உயர்
புகழிலும் மதியிலும் புதுமையிலும்
பண்ணுநற் பாவையிலும்-நல்ல
பாட்டிலும் கூத்திலும் படத்தினிலும்,
நண்ணிய தேவிதனை-எங்கள்
நாவிலும் மனத்திலும் நாட்டிடுவோம்.

வெற்றிகொள் படையினிலும்-பல
விநயங்கள் அறிந்தவர் கடையினிலும்
நற்றவ நடையினிலும்-நல்
நாவலர் தேமொழித் தொடரினிலும்,
உற்றசெந் திருத்தாயை-நித்தம்
உவகையிற் போற்றியிங் குயர்ந்திடுவோம்;
கற்றபல் கலைகளெல்லாம்-அவள்
கருணை நல் லொளிபெறக் கலிதவிர்ப்போம்

## 59. ராதைப் பாட்டு

ராகம்-கமாஸ் தாளம்-ஆதி

பல்லவி

தேகி முதம் தேகி ஸ்ரீ ராதே, ராதே!

சரணங்கள்

ராக ஸமுத்ரஜாம்ருதே ராதே, ராதே!;
ராஜ்ஞீ மண்டல ரத்ந ராதே, ராதே!
போக ரதி கோடி துல்யே ராதே, ராதே! (ஜய ஜய தேகி)
பூதேவி தப; பல ராதே, ராதே!
வேத மஹா மந்த்ர ரஸ ராதே, ராதே!
வேத வித்யா விலாஸினி ஸ்ரீ ராதே, ராதே!
ஆதி பரா சக்தி ரூப ராதே, ராதே!
அத் யத்புத ச்ருங்காரமய ராதே, ராதே! (தேகி)

தமிழ்க் கண்ணிகள்

காதலெனுந் தீவினிலே, ராதே, ராதே!-அன்று
கண்டெடுத்த பெண்மணியே! ராதே, ராதே! (தேகி)

காதலெனுஞ் சோலையிலே ராதே, ராதே!-நின்ற
கற்பகமாம் பூந் தருவே ராதே, ராதே! (தேகி)

மாதரசே!செல்வப் பெண்ணே, ராதே, ராதே!-உயர்
வானவர்க ளின்ப வாழ்வே ராதே, ராதே! (தேகி)

## தெய்வப் பாடல்கள்

## 60. கலைமகளை வேண்டுதல்

### நொண்டிச் சிந்து

எங்ஙனம் சென்றிருந்தீர்?-என
தின்னுயிரே!என்தன் இசையமுதே!
திங்களைக் கண்டவுடன்-கடல்
திரையினைக் காற்றினைக் கேட்டவுடன்
கங்குலைப் பார்த்தவுடன்-இங்கு
காலையில் இரவியைத் தொழுதவுடன்,
பொங்குவீர் அமிழ்தெனவே-அந்தப்
புதுமையி லேதுயர் மறந்திருப்பேன்.

மாதமொர் நான்காய்நீர்-அன்பு
வறுமையி லேயெனை வீழ்த்திவிட்டீர்;
பாதங்கள் போற்றுகின்றேன் என்தன்
பாவமெலாங் கெட்டு ஞானகங்கை
நாதமொ டெப்பொழுதும்-என்தன்
நாவினி லேபொழிந் திடவேண்டும்;
வேதங்க ளாக்கிடுவீர்-அந்த
விண்ணவர் கண்ணிடை விளங்கிடுவீர்.

கண்மணி போன்றவரே!-இங்குக்
காலையும் மாலையும் திருமகளாம்
பெண்மணி யின்பத்தையும்;-சக்திப்
பெருமகள் திருவடிப் பெருமையையும்,
வண்மையில் ஓதிடுவீர்!-என்தன்
வாயிலும் மதியிலும் வளர்ந்திடுவீர்;
அண்மையில் இருந்திடுவீர்!இனி
அடியனைப் பிரிந்திடல் ஆற்றுவனோ!

தானெனும் பேய்கெடவே,-பல
சஞ்சலக் குரங்குகள் தலைப்படவே,
வானெ னும் ஒளி பெறவே,-நல்ல
வாய்மையி லேமதி நிலைத்திடவே.
தேனெனப் பொழிந்திடுவீர்!-அந்தத்
திருமகள் சினங்களைத் தீர்த்திடுவீர்!
ஊனங்கள் போக்கிடுவீர்!-நல்ல
ஊக்கமும் பெருமையும் உதவிடுவீர்!

தீயினை நிறுத்திடுவீர்!-நல்ல
தீரமுந் தெளிவுமிங் கருள்புரிவீர்!
மாயையில் அறிவிழந்தே-உம்மை
மதிப்பது மறந்தனன்; பிழைகளெல்லாம்,
தாயென உமைப்பணிந்தேன்-பொறை
சார்த்திநல் லருள்செய வேண்டுகின்றேன்.
வாயினிற் சபத மிட்டேன்;இனி
மறக்ககி லேன்.எனை மறக்ககிலீர்!

